POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55

ANNA Leading Progressive Tamil Daily of the Poeedr

# நெல்லையில் புரட்சித்தலைவர்:

Regd. No. TN - MS (C) 244 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 14-3-1986 வெள்ளி -:- வெளியூர் 15-3-1986 சனி [இதழ் 143

# பிரமாண்ட வரவேற்பு

## பல்லாயிரம் பேர் திரண்ட எழுச்சிக் கோலம்



திருநெல்வேலி, மார்ச் 14- முப்பிறவி கண்ட முழுமதி - தமிழகத்தின் தளநாயகர் - ஏழை - எளியோரின் நம்பிக்கை நட்சத்திரம், இதயவேந்தன் புரட்சித்தலைவருக்கு தென்பாண்டிச் சீமையாம் திருநெல்வேலி, வரலாற்றுச் சிறப்புமிகு வரவேற்பினை அளித்தது.

உள்ளாட்சித் தேர்தலில் வெற்றி பெற்ற கழகத் தோழர்களுக்கு பொன்னாடை அணிவித்து பாராட்டும் விழாவில் பங்கேற்கவும், பால் பண்ணை துவக்க விழாவில் கலந்து கொள்ளவும் தமிழகத்தின் தளநாயகர்- நாலரைக் கோடி தமிழ் மக்களின் நெஞ்சமெலாம் நீக்கமற நிறைந்த புரட்சித் தலைவர் திருநெல்வேலிக்கு இன்றுவருகை தந்தார்.

புரட்சித் தலைவர் வந்த ஹெலிகாப்டர் பாளையங்கோட்டை ஆயுதப் போலீஸ் படை மைதானத்தில் பகல் 11 மணியளவில் வந்திறங்கியது.

ஆனால் அதிகாலையிலேயே ஆயுதப் போலீஸ் மைதானத்தில் மக்கள் அணி அணியாக வந்து திரண்டு விட்டனர். 11 மணிக்கு ஹெலிகாப்டர் பறந்து வந்ததும் கடலலை போல் கூடியிருந்த மக்கள் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

ஹெலிகாப்டரிலிருந்து அன்றலர்ந்த தாமரையாய் அக மகிழ்ந்து கூப்பிய கரங்களுடன் வந்திறங்கிய புரட்சித்தலைவரைப் பார்த்த மக்கள்வெள்ளம் "புரட்சித் தலைவர் வாழ்க" 'ஏழைகளின் ஏந்தல் எம். ஜி. ஆர். வாழ்க" என்ற வாழ்த் தொலி முழங்கியது. பொன்னிறத்துத் தலைவன் - புன்னகைத்து, மக்களைப் பார்த்து வணங்கிவாழ்த்துக்களை ஏற்றார்.

### வரவேற்பு

புரட்சித் தலைவருக்கு சட்டப்பேரவை தலைவர் பி, எச். பாண்டியன், கழக பொதுச் செயலாளர் எஸ். இராகவானந்தம், மாவட்டச் செயலாளர் கருப்பசாமிபாண்டியன் ஆகியோர் மாலை அணிவித்து வரவேற்றனர்.

புரட்சித்தலைவருடன் அவரது துணைவியார் ஜானகி அம்மையார், அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன், முத்துசாமி, மற்றும்சுலோசனா சம்பத் ஆகியோரும் வந்திருந்தனர்.

### கே.ஏ.கே. ப.உ.ச.

அமைச்சர்கள் கே.ஏ.கே. ப.உ,ச. ஒய்.எஸ்.எம் .யூசுப் மற்றும் கழக அமைப்புச் செயலாளர் திருமதி சத்தியவாணிமுத்து, அண்ணா தொழிற் சங்க பேரவை பொதுச்செயலாளர் வை. பெருமாள், நாடாளுமன்ற உறுப்பினர்கள் ஆலடி அருணா, கடம்பூர் ஜனார்த்தனம் சட்டப் பேரவை உறுப்பினர்கள் ஜான் வின்சென்ட் பாளை நாராயணன், எஸ். ஆர். சுப்பிரமணிய ஆதித்தன், செ. பெருமாள், ராமலிங்கம், தண்டராம்பட்டு வேலு, மேலவைஉறுப்பினர் அனகாபுத்தூர் ராமலிங்கம் மற்றும் நெல்லை நகர, சபைத்தலைவர் ஆதம். கோவைத்தம்பி, காஞ்சி பன்னீர் செல்வம், நம்பி ராஜன், கே. ஆர். பி. மணிமொழியன் இளமதி பூவலிங்கம் அப்துல் சமது டாக்டர் ஆறுமுகப்பாண்டியன், நேஷனல் என்ஜினீயரிங் கல்லூரி தாளாளர் கே. ராமசாமி, ராமசுப்பு, ஆகியோர் உட்பட ஏராளமான தோழர்கள் மாலை அணிவித்து வரவேற்றனர்.

மாவட்ட ஆட்சித் தலைவர்ராமதாஸ் மற்றும் உயர்போலீஸ் அதிகாரிகளும் வந்திருந்தனர்.

### வழிநெடுக மக்கள் வெள்ளம்

பின்னர் ஆயுத போலீஸ் மைதானத்திலிருந்து புரட்சித் தலைவர் புறப்பட்டு முருகன் குறிச்சி திருவனந்தபுரம் சாலை, வண்ணார்பேட்டை பஸ் நிலையச் சாலை வழியாக சங்கர் நகர் தங்கும் இல்லத்துக்கு வரும்போது வழி நெடுக ஏராளமான மக்கள் திரண்டிருந்து புரட்சித் தலைவரை வாழ்த்தி வரவேற்றனா.

மரங்களிலும். கட்டிடங்களின் மாடிகளிலும்ஏராளமான மக்கள் இருந்து புரட்சித்தலைவரைப் பார்த்து வாழ்த்தினர்.

புரட்சித் தலைவர் வருவதையொட்டி கொளுத்தும் வெயிலையும் பொருட்படுத்தாமல் ஏராளமான மக்கள் சாலைகளின் இருபுறங்களிலும் நீண்ட நேரம் காத்திருந்து உற்சாகமான வரவேற்பு அளித்தனர்.

வெற்றி விழாவுக்கு வெளியூர்களிலிருநது பஸ்களிலும் வேன்களிலும் வந்துள்ள பல்லாயிரக் கணக்கான தோழர்களும் புரட்சித்தலைவரை வரவேற்று வாழ்த்தி மகிழ்ந்தனர்.

புரட்சித்தலைவர்வருகையால் திருநெல்லைச் சீமை எழிற்கோலம் பூண்டு விழாக்காலத்து மாட்சியுடன் திகழ்கிறது.

## ராஜீவ் ஸ்டாக்ஹோம் புறப்பட்டார்

புதுடெல்லி, மார்ச் 14— சுவீடன்பிரதமர் பால் மேயின் இறுதிச் சடங்கில் கலந்து கொள்ள, பிரதமர் ராஜீவ் இன்று ஸ்டாக்ஹோமுற்குப் புறப்பட்டார்.

## மகாராஷ்டிர முதல்வராக எஸ்.பி.சவான் பதவி ஏற்பு

பம்பாய், மார்ச் 14— மகாராஷ்டிர முதல் அமைச்சராக எஸ். பி. சவான் இன்று பதவி ஏற்றார்.

கவர்னர் கோனா பிரபாகரராவ் அவருக்கு பதவிப் பிரமாணம் செய்து வைத்தார்.

பம்பாயில் உள்ள கவர்னர் மாளிகையில் இந்த பதவி ஏற்பு நிகழ்ச்சி நடைபெற்றது.

முதல் அமைச்சர் பதவியை ராஜினாமா செய்த சிவாஜிராவ் பாட்டீல் நிலாங்கேகர் சட்டசபை பா நாயகர்சங்கர் ராவ்ஜக் தப், மேலவைத் தலைவர் ஜெயந்தராவ் திலக், பம்பாய் ஐகோர்ட் தற்போதையதலைமை நீதிபதி எம்.எச். கனியா மற்றும இந்திரா காங்கிரஸ் தலைவர்கள் எதிர்கட்சித் தலைவர்கள் நிகழ்ச்சியில் கலந்து கொண்டனர்.

## விமானகட்டணம் உயருகிறது

புதுடெல்லி, மார்ச் 14- விமானப்பயணக்கட்டணம் வரும் 18ம் தேதி முதல் உயர்த்தப்பட விருக்கிறது. பெட்ரோல் டீசல் எண்ணெய் மற்றும் எரி பொருட்களின் விலை உயர்த்தப் பட்டிருப்பதைத் தொடர்ந்து விமானப் பயணக்கட்டணம் 6.33 சதவிகிதம் உயர்த்தப்படும் என்று இந்தியன் ஏர்லைன்ஸ் நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் கேப்டன்காமினி சட்டா புதுடெல்லியில் நிருபர்களிடம் தெரிவித்தார்.



முதல்வர் புரட்சிததலைவர் முன்னிலையில் திருவேடகம் பஞ்சாயத்துத் தலைவர் ஆதிமூலமும், கீழ்நாச்சிக்குளம் பஞ்சாயத்துத்தலைவர் வடிவேலுவம், கழகத்தில் இணைந்தனர் அப்போது அமைச்சர்கள் காளிமுத்து, முத்துசாமி ஆகியோர் உடனிருந்தனர்.

# கே.கே. ஷா காலமானார் புரட்சிதலைவர் இரங்கல்

சென்னை, மார்ச் 14— தமிழக முன்னாள் கவர்னர் கே.கே.ஷா காலமானார் அவரின் மறைவுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் இரங்கல் தெரிவித்து செய்தி அனுப்பியுளளார்.

மத்தியமுன்னாள் அமைச்சரும், தமிழ்நாடுமுன்னாள் கவர்னருமான கே.கே.ஷா இன்று அதிகாலை கல்கத்தாவில் மாரடைப்பால் காலமானார். அவருக்கு வயது 80.

கடந்தஞாயிற்றுக்கிழமை அவர் தனது மனைவியுடன் பம்பாயில் இருந்து கல்கத்தா வந்து சேர்ந்தார் கவர்னர் மாளிகையில் அரசு விருந்தினராக அவர் தங்கியிருந்தார். நேற்று இரவு அவருக்கு மாரடைப்பு ஏற்பட்டது. உடனடியாக மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார். அங்கே அவர் உயிர் பிரிந்தது.

கே.கே ஷாவுக்கு மனைவி ஒரு மகள், ஒருமகன் உள்ளனர்.

### முதல்வர்இரங்கல்

முதல்வர் புரட்சித் தலைவர் விடுத்துள்ள இரங்கல் செய்தியில் தெரிவித்துள்ளதாவது.

முன்னாள் தமிழக ஆளுனர் கே. கே. ஷா அவர்கள் மறைந்த செய்தி கேட்டு மிகுந்த துயர் அடைந்தேன். அவர் தேசிய விடுதலைப் போராட்டத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டவர், நாடு விடுதலை பெற்ற பிறகு பல்வேறு பொறுப்புகளை ஏற்று திறம்பட நிர்வகித்தவர் மத்திய அரசின் அமைச்சராக இருந்து சிறப்பாக செயல்பட்டவர். அவர் தமிழகத்தின் ஆளுனராக இருந்தபோது பல்வேறு அரசியல் மாறுதல்கள் ஏற்பட்டன என்பதால் அவருடையபதவிக்காலம் தமிழக மக்களுக்கு நன்குநினைவில் இருக்கும்.

பழகுவதற்கு இனிய பண்பாளர் என்பது அவரது தனித்தன்மை.

சிறந்த தேசியவாதியாகவும் நிர்வாகியாகவும் திகழ்ந்த அவருடைய மறைவு நமது பொது வாழ்விற்கு ஏற்பட்ட இழப்பு என்பதில் ஐயமில்லை.

அவரை இழந்து வாடும் அனைவருக்கும் என் சார்பிலும் தமிழக அரசின் சார்பிலும் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் தனது இரங்கல் செய்தியில் தெரிவித்துள்ளார்.

# மதுரையில் கொளுத்தும் வெயிலிலும் மக்களின் உற்சாக வரவேற்பு

மதுரை, மார்ச். 14- நெல்லை செல்லும் வழியில் மதுரை வந்த முதல்வர் புரட்சித் தலைவருக்கு விமான நிலையத்தில் உற்சாக வரவேற்பு அளிக்கப் பட்டது.

உள்ளாட்சித் தேர்தலில் கழக வேட்பாளர்களாக நின்று வெற்றி பெற்றோருக்கு நடைபெறும் பாராட்டு விழாவில் பங்கேற்கமுதல்வர்புரட்சித் தலைவர் திருநெல்வேலி செல்லும் வழியில் மதுரை வந்தார்.

முதல்வர் புரட்சித் தலைவரோடு புரட்சித்தலைவரின் துணைவியார் ஜானகி அம்மையார், அமைச்சர்கள் பண்ருட்டி ராமச்சந்திரன், ராசாராம், முத்துசாமி, கோவேந்தன், நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை. சிட்கோ தலைவர் சுலோசனா சம்பத் ஆகியோர் உடன் வந்தனர்.

விமான நிலையத்தில் அமைச்சர்கள் காளிமுத்து ராமசாமி, அருணாசலம் ஆகியோர் முதல்வர் புரட்சித்தலைவருக்கு சந்தன மாலையணிவித்து வரவேற்றனர்.

மாவட்டக்கழக செயலாளர்கள் மதுரை எஸ். பாண்டியன், சேடப்பட்டி முத்தையா எம். எல். ஏ. மற்றும் எம்.எல்.ஏக்கள், அன்பழகன், சலீம், பாலுசாமி, செல்வேந்திரன் எம். பி. பால்வளத்தலைவர்கள், நவநீதகிருஷ்ணன், சேலம் பழனிசாமி, ஆகியோர் வரவேற்றனர்.

வீட்டு வசதி வாரியத் தலைவர் திருப்பூர்மணிமாறன் தமிழ்நாடு பாடநூல் நிறுவனத் தலைவர் கோடம்பாக்கம் குமார், அக்ரோ தலைவர் லியாகத்அலிகான் கோவில் தக்கார்கள், சிதம்பரம், தங்கம், ஆகியோரும் மற்றும், மதுரை மாநகராட்சி முன்னாள் கவுன்சிலர்கள் வரவேற்றனர்.

முன்னாள் மேயர்கள் பட்டுராஜன். பாலகிருஷ்ணன் ஆகியோரும் முதல்வர் புரட்சித் தலைவரை வரவேற்றனர்.

### மக்கள் ஆர்வம்

முதல்வர் புரட்சித் தலைவரை வரவேற்க கொளுத்தும் வெயிலிலும் ஏராளமான மக்கள்விமான நிலையத்தில் கூடியிருந்தனர்.

புரட்சித்தலைவரைப் பார்த்தவுடன், "புரட்சித் தலைவர் வாழ்க" என விமான நிலையத்தில் கூடியிருந்த மக்கள் விண்ணதிர முழக்க மிட்டனர்.

மக்களின் அன்பான வரவேற்பை ஏற்கும் வகையில் முதல்வர் புரட்சித் தலைவர் கைகளை ஆட்டி தனது மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்.

அப்போது புரட்சித் தலைவரை அருகில் காண ஏராளமானவர்கள் முண்டியடித்துக கொண்டு வர முயற்சித்தனர்.

இதைப் பார்த்த முதல்வர் புரட்சித்தலைவர் கீழே கற்களும். முள்ளுமாக இருந்தபோதிலும் அதில் நடந்து மக்கள் கூட்டம் அருகே சென்றார்.

இதைக்கண்ட கூட்டத்தினர் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

தன்னை வரவேற்க வந்த கூட்டத்தினரிடையே சென்ற முதல்வர் புரட்சித் தலைவர் அவர்கள் அளித்த வரவேற்பை ஏற்றுக் கொண்டார்.

அதன் பிறகு புரட்சித் தலைவர் ஹெலிகாப்டர் மூலம் திருநெல்வேலிக்குப் புறப்பட்டுச் சென்றார்.

# குடும்பகார்டுக்கு கூடுதல் அரிசி வழங்கப்படும்

## அமைச்சர் திருநாவுக்கரசு அறிவிப்பு

திருச்சி, மார்ச் 14- குடும்ப கார்டுக்கு தற்போது வழங்கப்படும் 6 கிலோ அரிசிக்கு பதில் மீண்டும் 12 கிலோ அரிசி வழங்கப்படும் என்று அமைச்சர் திருநாவுக்கரசு அறிவித்தார்.

திருச்சியில் அமைச்சர் திருநாவுக்கரசு நிருபர்களை சந்தித்துப்பேசினார் அப்போது அவர் கூறியதாவது:-

இதுவரை 6 லட்சம் டன் சம்பா நெல் கொள்முதல் செய்யப்பட்டுள்ளது.

ஒரு குவிண்டால் நெல் கொடுக்கும் விவசாயிக்கு 35 ரூபாய்மதிப்புள்ள உரம் வழங்கும் சலுகை வரும் 3ந் தேதி வரை நீட்டிக்கப் பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் அரிசி நிலைமையை சமாளிக்க மாதம் ஒரு லட்சம் டன் அரிசி கொடுக்கும்படி மத்திய அரசுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் கடிதம் எழுதி இருக்கிறார்.

ஜனவரி மாதம் 90 ஆயிரம் டன் அரிசியும், பிப்ரவரி மாதம் 65 ஆயிரம் டன் அரிசியும் மத்திய அரசு ஒதுக்கியுள்ளது.

தமிழ்நாட்டில் குடும்ப கார்டுகளுக்கு 12 கிலோ அரிசிக்கு குறையாமல் கொடுக்க வேண்டும் என்று கூறியிருக்கிறோம்.

சில மாவட்டங்களில் அரிசி கூடுதலாக தேவைப் பட்டால். அரசுக்கு எழுதி அரிசியை பெற்று 12கிலோ அரிசி கொடுக்குமாறு மாவட்ட ஆட்சித் தலைவர்களுக்கு தகவல் கொடுத்து இருக்கிறோம்.

குடும்ப கார்டுகளுக்கு 20 கிலோ அரிசி வழங்க வேண்டும் என்பதுதான் அரசின் கொள்கை.

அரிசி நிலைமை சீரடைந்ததும் இதுபற்றி அதிகாரிகளுடன் கலந்து பேசி 20 கிலோ வழங்க நடவடிக்கைஎடுக்கப்படும்.

தற்போது அரிசியின் விலையை மத்திய அரசு உயர்த்தி விட்டதால் கூடுதலாக20 கோடிரூபாய் நட்டம் ஏற்படுகிறது.

நட்டத்தையும் பொருட்படுத்தாமல் குறைந்த ஊலைக்கு அரிசி வழங்கப் பட்டுவருகிறது.

எக்காரணத்தைக்கொண்டும் குடும்ப கார்டுகளுக்கான அரிசி விலையை உயர்த்தக்கூடாது என்று முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டுள்ளார்,

எனவே குடும்ப கார்டுகளுக்கான அரிசியின் விலையை உயர்த்த மாட்டோம்.

தமிழ் நாட்டில் தற்போது 17 ஆயிரம் அரிசி ஆலைகள் உள்ளன. இன்னும் 3 மாதத்தில் மேலும் பல அரிசி ஆலைகளுக்கான உரிமம் (லைசென்சு) வழங்கப்படும்

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

# 3பேரை சுட்டுகொன்ற சீக்கியதீவிரவாதிகள்

சண்டிகர், மார்ச் 14- பஞ்சாபில் சீக்கிய தீவிரவாதிகள் சுட்டு 3 பேர் இறந்தனர். ரூபாய் 7 லட்சத்தை அவர்கள் கொள்ளையடித்து சென்றனா.

பஞ்சாபில் தரம்கோட் கிராமத்திற்கு ஜீப் காரில் சீக்கிய தீவிரவாதிகள் சென்றனர். அங்கு 3 நிரங்கரி சீக்கியர்களை தீவிரவாதிகள் சுட்டுக் கொன்றனர்.

கொல்லப் பட்டவர்களில் ஒருவர் சுரஜ்பிரகாஷ் நிரங்கரி இவரை கொல்ல தீவிரவாதிகள் நீண்ட நாளாகவே திட்டமிட்டிருந்தனர். 2 அண்டுகளுக்கு முன் அவரை சுட முயற்சி நடந்தது. அதில் சுரஜ் பிரகாஷ் தப்பி விட்டார்.

தற்போது தீவிரவாதிகள் அவரைக் கொன்றுள்ளனர்.

### ரூ. 7 லட்சம் கொள்ளை

அமிர்தசரஸ் நகர சபை மின்சார அலுவலகத்திலும் சீக்கிய தீவிரவாதிகள் கை வரிசையைக் காட்டியுள்ளனர் துப்பாக்கியுடன் சென்று அங்கிருந்த 7 லட்சத்து 70 ஆயிரம் ரூபாயை அவர்கள் கொள்ளையடித்துச் சென்றுவிட்டனர்.



| செயல் | முயற்சி |
|---|---|
| பாராட்டு கிடைக்கும் போது முன் நிற்பதும், பழி வரும்போது பின் நிற்பதும்சரியல்ல. | எல்லோருக்கும் எல்லாம் தெரிந்திருக்காது தெரியாததை தெரிந்து கொள்ள முயலுவதே சிறந்தது. |
| — பேரறிஞர் அண்ணா | — தந்தை பெரியார் |



டெல்லியில் தமிழக தொழிலமைச்சர்-கே.ராசாராம் மத்திய அமைச்சர்கள், என். டி. திவாரி, சிவசங்கர், கே. சி. பந்த் ஆகியோரைச் சந்தித்துப் பேசினார்.

## படகு சர்வீஸ் துவக்கம்

இதற்கிடையில் தலைமன்னார் - ராமேஸ்வரம் இடையே படகு சர்வீஸ் நாளை (15-ந்தேதி) முதல் தொடங்க உள்ளது.

இதன் மூலம் இலங்கைக்கு தமிழர் அகதிகள் திரும்பிச் செல்லத் துவங்குவார்கள் என எதிர்பார்க்கப்படுகிறது.



# ஐ.நா.சபையில் இந்தியா கடும் எச்சரிக்கை: இலங்கை பணிந்தது

## தமிழர் பகுதிகளில் குண்டு வீச்சு நிறுத்தம்

கொழும்பு, மார்ச் 14- இலங்கையில் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவது பற்றி ஐக்கிய நாடுகள் சபை மனித உரிமைக் கழகத்திடம் இந்தியாவும், இதரநாடுகளும் கடும் கண்டனம் தெரிவித்ததைத் தொடர்ந்து இலங்கை தமிழர் பகுதிகளில் குண்டுவீசி தாக்குதல் நடத்துவதை ஜெயவர்த்தனே நிறுத்த உத்தரவிட்டுள்ளார். சமரச பேச்சு வார்த்தைக்கும் அவர் உடன்பாடு தெரிவித்துள்ளார்.

இலங்கையில் சிங்கள ராணுவம் தமிழர்களை பயங்கரமாக தாக்கிக் கொன்றுவருகிறது. வடக்குமற்றும்கிழக்குப் பகுதிகளில் தமிழர்களின்வீடுகளுக்கு தீவைத்து கொளுத்துகிறது. விமானங்கள் மூலமும் தமிழர் பகுதிகளில் தாக்குதல் நடத்தி தமிழர்களையும், தமிழர்களின் வீடுகளையும் நாசம் செய்து வருகிறது.

ஆயிரக்கணக்கான தமிழர்கள் இதுவரை உயிரிழந்தனர் பல்லாயிரக் கணக்கான தமிழர்கள் புகலிடம் தேடி ஓடுகிறார்கள்.

இந்தியாவுக்கு அபயம் தேடி தமிழகப்பகுதிகளுக்கு ஏராளமான மக்கள் தஞ்சம் புகுந்துள்ளனர் ஜெனிவாவில் நடைபெறும் ஐக்கிய நாடுகள் சபையின் மனித உரிமைக்கழகத்திடம் இந்தியா கடும் கண்டனம் தெரிவித்தது இலங்கை அரசின் இனவெறித்தாக்குதல் பற்றி இந்தியாவும், இதர நாடுகளும் ஜெயவர்த்தனே அரசை எச்சரித்தன.

மனித உரிமைகளை இலங்கை அரசு புறக்கணித்துவிட்டு சிறுபான்மை மக்களை வேட்டையாடி துன்புறுத்துகிறது. மனித உரிமைகளை ஜெயவர்த்தனே பறிக்கும் பணியில் இறங்கியுள்ளார். என்றும் உரிமைக்கழகத்திடம் இந்திய தூதுக்குழு தலைவர் டாக்டர் தில்லான் எடுத்துரைத்தார்.

இதைத் தொடர்ந்து ஜெயவர்த்தனே பணிந்து வந்துள்ளார்.

தமிழர் பகுதிகள் மீது நடத்தப்படும் தாக்குதல்களை நிறுத்துவதாக இலங்கை அரசு தெரிவித்துள்ளது.

யாழ்ப்பாண பகுதிகளில் நடத்தப்படும விமானத் தாக்குதல் மற்றும் ராணுவ தாக்குதல்கள் இன்று முதல்நிறுத்தப்படும் என்று இலங்கை பாதுகாப்பு அமைச்சர் அதுலத் முதலி நேற்று அறிவித்தார். வரும் ஒருவாரம்வரை ராணுவத் தாக்குதல்கள் நிறுத்தப்பட்டிருக்கும் என்றும் தேவைப்பட்டால் மேலும் அது நீடிக்கப்படும்என்றும் அவர் கொழும்புவில் நிருபர்களிடம் பேசுகையில் கூறினார்.

வரும் ஏப்ரல் மாதம் சிங்களவர் மற்றும் தமிழ் வருடப்பிறப்பு வருகிறது என்றும் அதுவரை தாக்குதல்கள் நிறுத்தப்பட்டிருக்கும் என்றும் அவர் கூறினார்.

### இலங்கை திரும்ப ஏற்பாடு

தமிழ் போராளிகளுக்கு போர் ஆயுதங்கள்கிடைத்த வண்ணம் உள்ளன. இந்த ஆயுத நடமாட்டம்உடனடியாக நிறுத்தப்பட வேண்டும். அப்படி நிறுத்தப்பட்டதும் இலங்கை போராளிகளுடன் பேச்சுவார்த்தை நடத்த இலங்கை தயாராக இருக்கிறது.

இலங்கையில் இருந்து தமிழகம் சென்றுள்ள அகதிகள் மீண்டும் இலங்கைக்கு திரும்புவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

நாளை சனிக்கிழமை முதல் தமிழகத்தில் இருந்து இலங்கை அகதிகள் நேரடியாகவே தலைமன்னாருக்கு திரும்பிவரலாம் ராமேசுவரத்தில் இருந்து காலை 8 மணியில் இருந்து மாலை 4 மணி வரை திரும்பலாம்.

இவ்வாறு அதுலத்முதலி கூறினார்.

இந்தியாவின் கடும் எச்சரிக்கையைதொடர்ந்து இலங்கை பணிந்து வருகிறது.

இலங்கைத்தமிழர் பிரச்சினை விரைவில் தீர்வதற்கான நடவடிக்கைகளை முதல்வர் புரட்சித் தலைவரும், பிரதமர். ராஜீவ் காந்தியும் தீவிரமாகமேற்கொண்டுள்ளனர்.

கடந்த 4 நாட்களில் மட்டும் யாழ்ப்பாணம் திரிகோண மலைப் பகுதிகளில் இலங்கையில் விமானதாக்குதலுக்கு 30பேர்பலியானார்கள். அப்பாவி மக்கள் வசிக்கும் பகுதிகளிலும் சிங்கள ராணுவம் ஹெலிகாப்டர் மூலம் குண்டுகளை வீசி தாக்கியது தமிழ் போராளிகள் வெளியிட்டுள்ள செய்தி இதைத் தெரிவித்துள்ளது. இந்தத் தாக்குதலில் சில ராணுவ வீரர்களும் கொல்லப்பட்டதாக தமிழர் விடுதலை இயக்கம் ஒரு அறிக்கையில் தெரிவித்தது.

## மத்திய மந்திரி போட்டியின்றி எம். பி. யாக தேர்வு

புதுடெல்லி, மார்ச் 14— மத்திய விளையாட்டுதுறை இணை அமைச்சர் மார்கரெட் ஆல்வா போட்டியின்றி மாநிலங்களவை உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

வரும் 20ந்தேதி எட்டு மாநிலங்களில் நடைபெற உள்ள மாநிலங்களவை தேர்தலில் 19 இடங்களுக்கு 35 பேர் வேட்புமனு தாக்கல் செய்திருந்தனர்.

வாபஸ் வேட்புமனு பெறுவதற்கான கடைசி நாளான நேற்றுகர்நாடகாவில் மனு தாக்கல் செய்திருந்த 8பேரில் 4 பேர் வாபஸ் பெற்றனர்.

இதை தொடர்ந்து மத்திய அமைச்சர் மார்கரெட் ஆல்வா, முன்னாள் மாநில சபாநாயகர் சந்திரகவுடா, மகேஸ்வரப்பா, ஆர். எஸ். நாயக் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

கேரளாவில் டி. கே. சிவது தலா (இ.காங்) பி. வி. அப்துல்லாகோயா(மு.லீக்) எம். ஏ. பாபி (மார்க்சிஸ்டு) ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மேற்கு வங்கத்தில் உள்ள ஒரே இடத்திற்கு டி. எஸ் குருஸ் (மார்க்சிஸ்டு) மீண்டும் தேர்வு பெற்றார். இமாசலப் பிரதேசத்தில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் சன்அன்சர்மா தேர்ந்தெடுக்கப்பட்டார்.

கர்நாடகாவில் ஜனதா காங்கிரசிடமிருந்து 3இடங்களை கைப்பற்றியுள்ளது.

19 இடங்களில் 9 இடங்களுக்கு போட்டியின்றி தேர்வுசெய்யப்பட்டுவிட்டது.

# ஸ்ரீ பெரும்புதூர் குடிநீர்திட்டம்: புரட்சிதலைவர் உத்தரவு

சென்னை, மார்ச் 14— ஸ்ரீபெரும்புதூரில் $1\frac{1}{4}$ கோடி ரூபாய் செலவில குடிநீர் வசதி செய்து கொடுக்கமுதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டார்.

செங்கற்பட்டு மாவட்டம் ஸ்ரீபெரும்புதூர் பஞ்சாயத்து யூனியன் தலைவர் தேர்தலில் வெற்றி பெற்ற பிள்ளைப்பாக்கம் கே மூர்த்தி (கழகம்) அதே யூனியனைச் சேர்ந்த பிள்ளைப் பாக்கம் கிராம பஞ்சாயத்து தலைவராக வெற்றி பெற்ற அவரது மனைவி ருக்மணிமூர்த்தி ஆகியோர் கோட்டையில் முதல்வர் புரட்சித் தலைவரைச் சந்தித்து பொன்னாடை போர்த்தி ஆசி பெற்றனர்.

அவர்களுடன் ஸ்ரீபெரும்புதூர் பஞ்சாயத்து யூனியன்களில் உள்ள பஞ்சாயத்துகளில் வெற்றி பெற்றபஞ்சாயத்து தலைவர்களில் 32 பேரும்மற்றும் மண்ணடி கிருஷ்ணமூர்த்தி ஆகியோரும் உடன்சென்றிருந்தனர்.

அப்போது ஸ்ரீபெரும்புதூர் நகரம்மற்றும் அதைச் சுற்றியுள்ள 21 பகுதிகளில் குடிநீர் பிரச்சினை தீர ஒரு திட்டத்தை நிறைவேற்றித் தருமாறுகோரி முதல்வர் புரட்சித் தலைவரிடம் பிள்ளைப்பாக்கம் மூர்த்தி ஒரு மனு கொடுத்தார்.

முதல்வர் புரட்சித் தலைவர் அந்த மனுவை படித்துவிட்டு அங்குகுடிநீர் திட்டத்தை நிறைவேற்றித் தருவதாகஉறுதி கூறினார்.

பிறகு முதல்வர் புரட்சித் தலைவர் இதுபற்றி பரிசீலனை செய்து ஸ்ரீபெரும்புதூரில் $1\frac{1}{4}$கோடி ரூபாய் செலவில் குடிநீர் திட்டத்தை நிறைவேற்ற உத்தரவு பிறப்பித்தார்

இதைத் தொடர்ந்து ஸ்ரீபெரும்புதூர் பஞ்சாயத்து யூனியனில் ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் யூனியன் தலைவர் பிள்ளைப்பாக்கம் மூர்த்தி. தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியத்தலைவர் உக்கம்சந்த்மற்றும்அதிகாரிகள் பஞ்சாயத்துத் தலைவர்கள் ஆகியோர் கலந்து கொண்டார்கள்.

பல இடங்களில் ஆழ்குழாய் கிணறுகள் தோண்டி குழாய் மூலம் குடிநீரை வினியோகம் செய்ய கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது. எந்தெந்த பகுதிகளில் கிணறுகளைதோண்டலாம் என்றும் ஆலோசிக்கப்பட்டது

பின்னர் ஆழ்குழாய் கிணறுகள் தோண்டுவதற்கான இடங்களை தேர்வு செய்ய உக்கம் சந்தும், பிள்ளைப்பாக்கம் மூர்த்தியும் ஸ்ரீபெரும்புதூர் மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களைப்பார்வையிட்டனர்

## முன்னாள் கவர்னர் ஆபிரகாம் மறைவு

கொச்சி, மார்ச் 14— கேரள முன்னாள் கவர்னர் கே. சி, ஆபிரகாம் காலமானார், அவருக்கு வயது 87 அவருக்கு ஒரே ஒரு மகன் மட்டும் உள்ளார்.

கே.சி.ஆபிரகாம் எர்ணாகுளத்திலும், சென்னையிலும் படித்தபின்ஆசிரியர் வேலை பார்த்தார். 30 ஆண்டுகளுக்குப் பின் அந்த வேலையை விட்டு தீவிர அரசியலில் இறங்கினார்.

## மாஜிஸ்திரேட் வேலை நீக்கம்

பாலக்காடு மார்ச 14— கேரள மாநிலம் பாலக்காடு முதல் வகுப்பு மாஜிஸ்திரேட் குளோரி பொனாண்டஸ் இவர் தற்காலிக வேலை நீக்கம் செய்யப்பட்டார். இதற்கான ஆணையை கேரள உயர் நீதி மன்றம் பிறப்பித்தது சஸ்பெண்டுக்கான காரணம் அறிவிக்கப்படவில்லை,

## ரஷ்ய ராக்கெட்டில் 2 விண்வெளிவீரர்கள் பயணம்

மாஸ்கோ.மார்ச் 14— இரண்டு விண்வெளி வீரர்களுடன் சோவியத் செயற்கைக் கோள் சோயுஸ் டி 15 நேற்று வானில செலுத்தப்பட்டது.

பைக்கானர் விண்வெளி ஆராய்ச்சி நிலையத்தில் இருந்து சோயுஸ் டி. 15 ராக்கெட் மூலம் வானில் படுவேகமாக கிளம்பிச் சென்றது

விண்வெளியில் நிறுத்தப்பட்டிருக்கும் "மிர் என்ற விண்வெளி ஆய்வுகலத்தை நோக்கி இந்த விண்வெளி வீரர்களும் பயணம் ஆனார்கள்.

ஒருவர் பெயர் லியோனிட் கிசிம் (வயது 45) மற்றொரு வீரரின் பெயா விளாடிமீர்கோலாவ்யோவ் வயது-44) இந்திய விண்வெளிவீரர் ராகேஷ்சர்மாவுடன் ஏற்கனவே 1984 ஆம் ஆண்டில் 'சல்யூட் 7ல்' இந்த 2 வீரர்களும் பயணம் செய்தவர்கள் ஆவா.



# நலிந்த கோயில்களை புதுப்பிக்க ரூ. 15 லட்சம்: ஆர்.எம்.வீ. வழங்கினார்

சென்னை, மார்ச். 14- கிராமப்புறங்களில் உள்ள நலிந்த 150 கோயில்களை புதுப்பிக்கரூபாய்15லட்சத்தை அமைச்சர் ஆர். எம். வீ வழங்கினார்.

நிதிவசதி இல்லாதகோயில்களின் திருப்பணிக்காக நிதி உதவி வழங்கும் திட்டத்தின் கீழ் 150 கோயில்களுக்கு தலா ரூபாய் 10 ஆயிரம் வீதம் 15 லட்சம் ரூபாய் வழங்கும் விழா வடபழனி கோயிலில் நடந்தது.

பழனி முருகன் கோயிலில் ஒருகோடிரூபாய்நிலையான வைப்புநிதியிலிருந்து வரும் வட்டியின் மூலம் இந்த தொகை வழங்கப்பட்டது.

இந்தவிழாவுடன் சென்னை வடபழனி கோயிலில் ரூபாய் 2.5 லட்சம் செலவில் கட்டப்பட்ட அருணகிரிநாதர் மண்டபத்தை அமைச்சர் ஆர். எம். வீ. திறந்து வைத்தார். வடபழனி ஆண்டவர் கல்யாண கந்தர் அனுபூதி மண்டபம் கோயில்பணியாளர் குடியிருப்பு, அங்காடி மையம் ஆகியவைகளுக்கான அடிக்கல் நாட்டு விழாவும் நடத்தப்பட்டது. அமைச்சர் ஆர்.எம்.வீ. அடிக்கல் நாட்டினார். நலிந்த கோயில்களுக்கு அமைச்சர் நிதி வழங்கினார்.

அமைச்சர் ஆர் எம்.வீ பேசுகையில்கூறியதாவது:- ஏழு கோடி ரூபாய் வைப்பு நிதியில் கோயில் மேம்பாடு திட்டத்தை 1984ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் முதல்வர் புரட்சித்தலைவர் தொடங்கி வைத்தார்.

நிதிப்பற்றாக் குறையினால் ஒரு வேளை பூஜை கூட நடத்த முடியாத கோவில்கள்பல இருக்கின்றன அந்த அவல நிலையை போக்கிடவும் ஒருவேளை பூஜையாவது நடைபெற வேண்டும் என்பதற்காகவும் ரூபாய்5 கோடி வைப்பு நிதியாக வைக்கப்பட்டது

இது தவிர கோயில் பணியாளர்களுக்கு உதவ ரூபாய் 1 கோடி வைப்பு நிதி வைக்கப்பட்டுள்ளது

பெரும் பான்மையான அர்ச்சகர்கள் அன்றாடங் காய்ச்சியாக இருக்கிறார்கள்.கோயில்கள் தழைக்க வேண்டுமானால் ஆன்மீகம்நிலைக்க வேண்டுமானால் கோயில் சொத்துக்களை அனுபவித்துக் கொண்டிருப்பவர்கள் கருணை காட்ட வேண்டும்.

ஏழு கோடி ரூபாய் திட்டத்தை உருவாக்கி கோயில்களைக் காப்பாற்ற வழி வகுத்த புரட்சித் தலைவருக்கு நன்றி.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

விழாவுக்கு அறநிலையத் துறை கமிஷனர் சுந்தரமூர்த்தி தலைமை தாங்கினார், சைதை துரைசாமி எம். எல் ஏ. தக்கார் சீனிவாச ராவ் பழனி கோவில் தக்கார் பொன்னுசாமி ஆகியோர் விழாவில் கலந்து கொண்டனர்.

# குண்டு வீச்சு நிறுத்தம் என்பது வெறும் கண்துடைப்பு

## அமிர்தலிங்கம் அறிவிப்பு

சென்னை, மார்ச் 14— தமிழர்கள் மீது குண்டு வீச மாட்டோம் என்று இலங்கை அறிவித்திருப்பது வெறும் கண் துடைப்பு என அமிர்தலிங்கம் கூறியுள்ளார்.

தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியின் செயலாளர் அமிர்தலிங்கம் இதுகுறித்து தெரிவித்திருப்பதாவது:-

தமிழர்கள் வசிக்கும் பகுதிகளில் குண்டு வீசுவதை நிறுத்தப் போவதாக இலங்கை அரசு அறிவித்துள்ளது.

ஆனால் இது வெறும் கண்துடைப்பு நாடகம் தான்.

இந்தியா உட்பட பல்வேறு நாடுகள் ஐ நா சபையின் மனித உரிமைகள் கழகத்தில் இலங்கையின் வெறிச் செயலை கண்டித்ததை அடுத்து இலங்கை இந்த அறிவிப்பை வெளியிடுள்ளது.



இலங்கையில் இருந்து அகதிகளாக வந்துள்ளவர்கள் மனதில் பயம் நீங்கவில்லை ஆகவே பெரும்பாலானவர்கள் திரும்பிச் செல்ல விரும்பவில்லை

இவ்வாறு அமிர்தலிங்கம் கூறினார்.




Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India AnnaD.M.K.Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, MADRAS-29.

## புரட்சித்தலைவர் அரசுக்கு

# மத்திய மந்திரி பாராட்டு



## "தொழில் வளர்ச்சிக்கு பாடுபடுகிறது"

**சென்னை, மார்ச் 14- தமிழகத்தில் தொழில் வளர்ச்சி ஏற்பட தமிழக அரசு தக்க முயற்சிகளை மேற்கொண்டுள்ளது என்று மத்திய தொழில் துறை இணை அமைச்சர் அருணாசலம் பாராட்டுத் தெரிவித்துள்ளார்.**

சென்னையில் மத்திய தொழில்துறை இணை அமைச்சா அருணாசலம் சிறு தொழில்கள் மற்றும் வர்த்தகர்கள் சங்கத்தின் சார்பில் ஏற்பாடு செய்யப் பட்டிருந்த விழாவில் கலந்து கொண்டார்.

விழாவில் பிரதமர்ராஜீவ் காந்தியின் படத்தை மத்திய அமைச்சர் அருணாசலம் திறந்து வைத்தார். முதல்வர் புரட்சித்தலைவர் படத்தை அமைச்சர் கே ஏ. கே. திறந்து வைத்தார்.

பின்னர் மத்திய அமைச்சர் அருணாசலம் நிருபர்களுக்குபேட்டியளித்தார்.

பேட்டியின் போது அவர் கூறியதாவது:-

தமிழக அரசு தமிழகத்தில் தொழில் வளர்ச்சி ஏற்பட தக்க முயற்சிகளை மேற்கொண்டுள்ளது.

சிறு தொழில்கள் மத்திய அரசு அறிவித்துள்ள புதிய வரி விதிப்பு கொள்கை மற்றும் இந்த ஆண்டு மத்திய பட்ஜெட்டில்வெளியிடப்பட்ட சில அறிவிப்புகளைபொறுத்தவரைபெருமளவில் பாதிக்கப்பட்டு பல சிறு தொழில் பிரிவுகளை மூடவேண்டிய நிலை உருவாகி விட்டது பற்றி மதத்திய நிதியமைச்சருடன் கலந்து பேசி தொழில் துறையினருக்கு உள்ள சங்கடங்களை நீக்க தக்க முயற்சிகள் மேற்கொள்வேன்.

ஊட்டியில் உள்ள இந்துஸ்தான்போட்டோபிலிம் தொழிற்சாலையின் விரிவாக்கத் திட்டத்துக்கு அனுமதி வழங்குவது பற்றி மத்திய அரசு தீவிர பரிசீலனையில் இருந்து வருகிறது;

### எக்ஸ்ரே பிலிம்

அங்கு விசேஷ எக்ஸ்ரே பிலிம் தயாரிக்க திட்டமிடப்பட்டுள்ளது. கலர் பிலிம் தயாரிப்பதற்காக சில தனியார் நிறுவனங்கள் விண்ணப்பித்து இருக்கின்றன

1985-ம் ஆண்டில் தமிழகத்தில் புதிய தொழில்கள் துவங்க 109 அனுமதி கடிதங்களும், 177 லைசென்சுகளும் வழங்கப்பட்டுள்ளன.

இவ்வாறு மத்திய அமைசசர் அருணாசலம் கூறினார்.

## சிறுபான்மையினர் பாதிப்பு: எம்,பி.க்கள் குழு காஷ்மீர் செல்கிறது

புதுடெல்லி,மார்ச் 13-

ஜம்மு - காஷ்மீரில் ஏற்பட்ட கலவரத்தின் போது சிறுபான்மையினர் பாதிக்கப்பட்டது தெரிந்ததே.

இதை நேரில் பார்த்து கண்டறிய 5 பேர் அடங்கிய இந்திரா காங்கிரஸ் எம்.பிக்கள் குழு ஒன்று காஷ்மீர் செல்லவிருக்கிறது.

இந்த வார இறுதி அல்லது அடுத்த வார துவக்கத்தில் இந்தக் குழுவினர் காஷ்மீருக்குச் செல்லுவார்கள்.

கலவரத்தால் பாதிக்கப் பட்டவர்களுக்கு எந்த அளவு நிவாரணம் அளிக்கப்பட்டது. என்பது பற்றி இவர்கள் கண்டறிவார்கள் என்று தெரிகிறது.

## ஐஸ்கிரீம் வியாபாரி வீட்டில் சோதனை

பம்பாய், மார்ச் 14—பம்பாய் பூரி-ஐஸ்கிரீம் வியாபாரி வீட்டை வருமான வரி அதிகாரிகள் சோதனை நடத்தினர்.

கடந்த 5 ஆண்டுகளில் இவருக்கு 50 லட்ச ரூபாய் லாபம் கிடைத்துள்ளது சோதனையில் தெரியவந்துள்ளது.

ஏராளமான தஸ்தாவேஜுகளையும்அதிகாரிகள் பறிமுதல் செய்தனர்.

## சென்ட்ரல் ரெயில்நிலைய தொலைபேசி எண்கள் மாற்றம்

சென்னை, மார்ச் 14— சென்னை பூக்கடையில் புதிய தொலைபேசி இணைப்பகம் இம்மாதம் 15 ந்தேதியிலிருந்துசெயல் படத் துவங்கும். எனவே சென்ட்ரல் ரயில் நிலையத்தின் தொலை பேசி எண்களில் மாற்றம் செய்யப் பட்டுள்ளது.

புதிய எண்கள் விவரம் வருமாறு:-

பொதுவிசாரணை:ரெயில் வருகை மற்றும் புறப்பாடு: 563539.

முன்பதிவுவிசாரணைகள் உயர் மற்றும் இரண்டாம் வகுப்பு: 564455.

உயர் வகுப்பு உடனடிப் பதிவு 563939.

இரண்டாம் வகுப்பு உடனடிபதிவு:563535. 563536

எம்.ஜி. முன் பதிவு. 563345-563346.

ரெயில்நிலைய கண்காணிப் பாளர், துணை கண்காணிப் பாளர் 563218.

## முதல்வர் புரட்சிதலைவர் தொடங்கி வைக்கும் கருங்கல் பாலிஷ் ஆலை

### மணலியில் 25-ந் தேதி விழா

சென்னை, மார்ச் 14— ஆசியாவிலேயே மிகப் பெரிய கருங்கல் பாலிஷ் தொழிற்சாலையைவரும் 25-ந்தேதி முதல்வர் புரட்சித்தலைவர் தொடங்கி வைக்கிறார்.

சென்னைக்கு வடக்கே மணலியில் 23 ஏக்கர் நிலத்தில் 6½கோடி ரூபாய் முதலீட்டில் 'கருங்கல் பாலிஷ்' தொழிற்சாலை அமைக்கும் வேலை தீவிரமாக நடந்து வருகிறது.

தமிழக அரசுக்கு சொந்தமான இந்த நிறுவனம் முழுவதும் ஏற்றுமதிக்காக பளிங்கு போல் வழுவழுப்பு ஆக்கப்பட்ட பாலிஷ் கற்களை தயாரிக்க இருக்கிறது.

ஆண்டுக்கு 60 ஆயிரம் கல் தகடுகள் தயாரிக்கப் படும்.

இந்த தொழிற்சாலையில் நேரடியாக 120 பேருக்கு வேலை கிடைக்கும்,

இந்த தொழிற்சாலையை இம்மாதம் 25-ந் தேதி முதல்வர் புரட்சித் தலைவர் திறந்து வைக்கிறார்,

விழாவில் மத்திய அமைச்சர் சிவசங்கர் கலந்து கொள்வார் என்று தெரிகிறது.

விழாவுக்கு அமைச்சர் ராசாராம் தலைமை வகிப் பார்.

தமிழக அமைச்சர் பெருமக்களும் கலந்து கொள்கின்றனர்.

இந்த தொழிற்சாலைப் பற்றி அமைச்சர் ராசாராம் நிருபர்களிடம் கூறியதாவது:-

இந்தத் தொழிற்சாலை ஆசியாவிலேயே மிகப் பெரிய தொழிற்சாலை ஆகும்.

துவக்க காலத்தில் 50 சதவீதம் உற்பத்தி திறனுடன் இருக்கும். முற்றிலும் ஏற்றுமதிக்காக தயாரிக்கப்படுவதாகும் இது.

முதலாண்டு விற்பனை ரூபாய்266 லட்சமாக இருக்கும். மூன்றாவது ஆண்டில் ரூபாய் 450 லட்சமாக உயரும்.

இத்தொழிற்சாலையில் தேர்ச்சி பெற்ற தொழிலாளர்களை உள்ளடக்கி 120 பேர்களுக்கு நேரிடையாக வேலை வாய்ப்பு கிடைக்கும்.

மறைமுகமாக 500 பேர் இத்தொழிற்சாலயால் வேலை வாய்ப்பு பெறுவார்கள்.

காழ்ப்புணர்வு கொண்ட சிலரது தூண்டுதலால் இந்த தொழிற்சாலைக் கட்டிடங்கள் பற்றியும் இயந்திரங்கள் பற்றியும் அவதூறான செய்திகள் பத்திரிகைகளில் வெளிவந்துள்ளன.

இந்த அவதூறுகளை யெல்லாம் பொய்யாக்கும் வகையில் தொழிற்சாலை எல்லா வகையிலும் முடிக்கப் பெற்று உற்பத்தி தொடங்கக் கூடிய நிலையில் உள்ளது.

முதல்வர் புரட்சித் தலைவரது திருக்கரங்களால் 25ம் தேதி மாலை 6மணிக்கு இது துவக்கிவைக்கப்படுகிறது.

இவ்வாறு அமைச்சர் ராசாராம் கூறினார்.

## பட்டதாரி தொகுதி தேர்தல்: 24 - ந்தேதி வாக்கு எண்ணிக்கை

சென்னை, மார்ச் 14- மேலவையில் 4 இடங்களுக்கு 23ந் தேதி தேர்தல் நடைபெற உள்ளது. அது பற்றிய விவரம் வருமாறு:—

சென்னை, மார்ச் 14- மேற்கு பட்டதாரி தொகுதியில் 48826வாக்காளர்கள் உள்ளனர்.

கிழக்கு பட்டதாரி தொகுதியில் 31211 வாக்காளர்கள் உள்ளனர்.

முகவை, அண்ணா உள்ளிட்ட ஆசிரியர் தொகுதியில் 14916 வாக்காளர்கள் உள்ளனர்,

சென்னைசெங்கற்பட்டில் ஆசிரியர் தொகுதியில் 15130 வாக்காளர்கள் உள்ளனர்,

ஆசிரியர் தொகுதி வாக்காளர்கள் செகண்டரி பள்ளி மட்டத்தில் 3 ஆண்டுக்காலம் பணியாற்றியவர்கள் வாக்களிக்கத்தகுதி பெற்றவர்கள் ஆவார்கள்.

பட்டம்பெற்று 3 ஆண்டு ஆனவர்கள் பட்டதாரி தொகுதியில் வாக்களிக்க தகுதிபெற்றவர்கள் ஆவார்கள். 23ந்தேதி காலை 8 மணி முதல் மாலை 4 மணி வரை வாக்கு பதிவ நடைபெறும்

ராமனாதபுரம், ஆசிரியர் தொகுதியில் 103 வாக்கு சாவடிகளும். சென்னை செங்கை ஆசிரியர் தொகுதியில்120 வாக்குசாவடிகளும்,மேற்கு பட்டதாரி தொகுதியில் 180 வாக்குச் சாவடிகளும் கிழக்கு பட்டதாரி தொகுதியில் 168 வாக்குச் சாவடிகளும் இருக்கும்.

வாக்குகள் எண்ணப் படும் இடங்கள் கிழக்கு பட்டதாரி தொகுதி:- தஞ்சை கலெக்டர்அலுவலகம் பனசல் கட்டிடம், தஞ்சை 24ந் தேதி 11 மாலை தொடங்கும் மேற்கு பட்டதாரி தொகுதி:—

கோவை கலெக்டர் அலுவலகம் மதியம் 2 மணி சென்னை — செங்கை ஆசிரியர் தொகுதி காஞ்சிபுரம் கலெக்டர்அலுவலகம் காலை 9 மணிக்கு தொடக்கம்மதுரைமுகவைஆசிரியர் தொகுதி:-

சுவாமேல் நிலைப்பள்ளி பிற்பகல் 2 மணிக்கு தொடங்கும்.

வாக்கு எண்ணுமிடத்தில் வழக்கம் போல் உள்ள நிபந்தனைகள் பின்பற்றப் படும். ஏப்ரல் 21-முதல் புதிய உறுப்பினர்கள் பதவிக்காலம் தொடங்கும்

இந்த விவரங்கள் தலைமை தேர்தல் அதிகாரி (பொறுப்பு) தேவராஜன் கூறினார்.



# நெல்லை பால் பண்ணை திறப்புவிழா

மாண்புமிகு தமிழ்நாடு முதல்வர்

டாக்டர் **எம்.ஜி.ஆர்** அவர்கள்

## திறந்து வைக்கிறார்

நாள்: 15.3.1986 சனிக்கிழமை நேரம்: காலை 10-30

இடம்: ரெட்டியார் பட்டி ரோடு, பாளையங்கோட்டை

















### நெல்லை மாவட்டத்தில் கூட்டுறவு பால் உற்பத்தி

நடப்புஆண்டில் பயனடைபவை:

| | |
|---|---|
| பால் உற்பத்தியாளர்கள் கூட்டுறவு சங்கங்கள் | : 459 |
| கிராமங்கள் | : 580 |
| விவசாயிகள் | : 18,000 |
| கறவை மாடுகள் | : 32,000 |
| பால்குளிரூட்டும் நிலையங்கள் | : 2 |
| குளிரூட்டும் திறன் | : 20,000 லிட்டர் |
| பால் பக்குவப்படுத்தும் ஆலை | : 1 |
| பால் பக்குவப்படுத்தும் திறன் (நாளொன்றுக்கு) | : 50,000 லிட்டர் |

ஒருங்கிணைந்த பால் அபிவிருத்தி திட்டம் தேசிய கூட்டுறவு பால் வளர்ச்சிக் கழகத்தின் உறுதுணையோடு 554 லட்சங்கள் செலவில் ஏழாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் அமுலாக்கப்படும்.

ஏழாவது ஐந்தாண்டு திட்டத்தில்பயன் பெறவிருப்பவை

| | |
|---|---|
| பால் உற்பத்தி சங்கங்கள் | : 192 |
| கிராமங்கள் | : 241 |
| விவசாயிகள் | : 70500 |
| கறவை மாடுகள் | : 83100 |
| பால் சேகரிக்கும் குழுக்கள் | : 14 |
| கால்நடை மருத்துவப்பிரிவு | : 16 |
| கால்நடை அவசர மருத்துவ பிரிவு | : 8 |
| பால் கொள்முதல் | : 63500 |
| பால் குளிரூட்டும் நிலையங்கள் | : 3 |
| குளிரூட்டும் திறன் | : 70.000 நாளொ[illegible]றுக்கு லிட்டர் |
| பால் பக்குவப்படுத்தும் ஆலை | : 1 லட்சம் லிட்டருக்கு விரிவாக்கம் செய்தல் |
| பால் பக்குவப்படுத்தும் திறன் | : 50,000 லிட்டர் |

### திருநெல்வேலி பால் பண்ணை - சில குறிப்புகள்

1) உற்பத்தி திறன் நாள் ஒன்றுக்கு 50,000 லிட்டர்
2) திட்ட மதிப்பீடு ரூ. 160 லட்சங்கள்
3) மொத்த பரப்பு 17.65 ஏக்கர்கள்
4) ஆரம்பிக்கப்பட்ட நாள் 25.11,1983
5) கட்டி முடிக்கப்பட்ட நாள் 10.3.1986

தலைமை :
மாண்புமிகு தொழிலாளர் நலம் மற்றும் பால்வளத்துறை அமைச்சர்
**கே.ஏ. கிருஷ்ணசாமி** அவர்கள்

வாழ்த்துரை :
மாண்புமிகு தமிழ்நாடு சட்டமன்ற பேரவைத் தலைவர்
திரு. **பி.எச். பாண்டியன்** அவர்கள்

மாண்புமிகு பொதுப்பணித்துறை அமைச்சர்
திரு. **யா.சை.மு. யூசுப்** அவர்கள்

திரு. **ஜி. ஆர். எட்மண்ட்** அவர்கள்
(தமிழ்நாடு அரசின் டெல்லி சிறப்புப் பிரதிநிதி)

திரு. **க. கலைமணி** எம்.எல்.சி.
(தமிழ்நாடு பால் உற்பத்தியாளர்கள் கூட்டுற இணையத் தலைவர்)

திரு. **இரா. சனார்த்தனன்** எம்.பி.

திரு. **டி. வி. அந்தோணி** இ.ஆ.ப.,
(தலைமைச் செயலர், தமிழ்நாடு அரசு)

வரவேற்பு :
திரு. **வி. இராம்தாஸ்** இ.ஆ.ப.,
[illegible]சித் தலைவர், திருநெல்வேலி

திட்ட அறிக்கை வாசித்தல் :
திரு. **வே. சங்கரசுப்பையன்** இ.ஆ.ப.
பால் உற்பத்தி மற்றும் பால்வள மேம்பாட்டுத் துறை ஆணையரும் தமிழ்நாடு பால் உற்பத்தியாளர்கள் கூட்டுறவு இணையத்தின் நிர்வாக இயக்குநர்

மற்றும் நாடாளுமன்ற, சட்டமன்ற, மேல[illegible] பேரவை உறுப்பினர்கள் கலந்து கொள்கிறார்கள்.

**அனைவரும் வருக**

வாழ்த்துக்கள் கூறும் மாவட்ட பால் உற்பத்தியாளர்கள் கூட்டுறவு ஒன்றியங்கள்:

| | | |
|---|---|---|
| செங்கல்பட்டு | கோவை | நீலகிரி |
| வட ஆற்காடு | பெரியார் | திருச்சி |
| தென் ஆற்காடு | மதுரை | தஞ்சாவூர் |
| சேலம் | தருமபுரி | புதுக்கோட்டை |

**ஆவின்**

தமிழ்நாடு பால் உற்பத்தி[illegible]
கூட்டுறவு இணையம்

DIPR / 11457 / 661 / 86 / NAS